Regd: M: No. 7897 NAVAMANI (Tamil Daily) MADRAS Phone No. 76199




# நவமணி

ஆசிரியர்: சோஉல

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

மலர் 16 இதழ் 211 ★ சென்னை 14—4—76 புதன் ★ வெளியூர் 15—4—76 வியாழன் ★ 4 பக்கம் 25 காசு


கூழுக்கு அடிமையான தொழிலாளி பேட்டி
3-ம் பக்கம்

## எதிர் கட்சிகளுக்கு காட்டமான பதில்

# சஞ்சய் வாரிசா? இந்திரா பேட்டி

புதுடெல்லி, ஏப். 14—பிரதமர் இந்திராவுக்குப் பிறகு அவரது வாரிசாக அவருடைய மகன் சஞ்சய் காந்தி பிரதமர் பதவி ஏற்பாரா? இந்தக் கேள்விக்கு பிரதமர் இந்திரா காந்தி பதிலளித்தார்.





ஈரான் நாட்டு செய்தியாளர் ஒருவர் டெல்லியில் இந்தியப்பிரதமர் இந்திரா காந்தியைப் பேட்டி கண்டார்.

கேள்வி: உங்களுடைய மகன் (சஞ்சய் காந்தி), அரசியலில் தீவிர பங்கு மேற்கொண்டுவருவதால் அவர் உங்களுக்கு வாரிசாக (பிரதமராக) வரக்கூடும் என்று மக்கள் மனதில் தானகவே கருத்து எழுகிறது. இதுபற்றி தங்களுடைய சொந்த அபிப்பிராயம் என்ன?

பிரதமர் இந்திரா பதில் கூறியதாவது:—

"எங்கள் அரசியல் அமைப்பு முறைபின்படி யார் எனக்குப் பிறகு பதவிக்கு வருவார் என்பது அவருக்கு எந்த அளவுக்கு கட்சியின் ஆதரவு கிடைத்திருக்கிறது என்பதைப் பொறுத்திருக்கும். மக்களின் அதிகபட்ச ஆதரவு யாருக்கு கிடைக்குமோ அவரையே கட்சி தேர்ந்தெடுக்கும் என்பது தெளிவு.

உண்மையான அரசியல் ஊழியர் சமாளிக்கவேண்டிய கஷ்டங்கள் எதுவும் தமது மகனுக்கு வருவதை யாரும் விரும்பமாட்டார்" என்றார் இந்திரா காந்தி.

ஒரு கட்சி ஆட்சிமுறையைப் புகுத்த தாம் விரும்பவில்லை என்று அவர் வேறொரு கேள்விக்கு பதிலளித்தார்.

நிலமற்ற ஏழைகளுக்கு நிலம் வினியோகிப்பதற்கான எதிர்காலத்திட்டம் என்ன என்று வேறொரு கேள்வி கேட்கப்பட்டது. இதற்காக தனியாகத் திட்டம் எதுவும் இல்லை என்றும், ஏற்கனவே மேற்கொள்ளப்பட்ட முடிவு தான்தற்போது நிறைவேற்றப்பட்டு வருவதாகவும் இது சம்பந்தமாக நிலச்சட்டங்கள் மாநிலத்திற்கு மாநிலம் வேறுபடுவதாகவும் அவர் தெரிவித்தார்.

### சமாதான சகவாழ்வு

பெரிய நாடுகள் குறிப்பாக வங்காளதேஷ் பாகிஸ்தான் போன்ற அண்டை நாடுகள் சம்பந்தமாக சமாதான சகவாழ்வு கொள்கையையே இந்தியா தொடர்ந்து பின்பற்றும் என்று அவர் கூறினார்.

அவர் மேலும் சொன்னதாவது:—

"இந்திய துணைக் கண்டத்தில் நல்லெண்ணம், நட்பு, ஒத்துழைப்பு, நிலையான தன்மை ஆகியவை ஏற்படச் செய்வதற்கு நாங்கள் முயற்சி மேற்கொள்வோம்.

எல்லா நாடுகளுடனும் நட்புறவுகொள்ள இந்தியா விரும்புகிறது. ஆனால் எல்லா விஷயங்களிலும் இந்தியா சுயேச்சையான முடிவுகளையே மேற்கொள்கிறது.

### ரஷிய உறவு

"ரஷியாவுடன் நாங்கள் நெருங்கிய உறவுகொண்டிருப்பதாக மேலைநாட்டினர் சிலர் அழுத்தந்திருத்தமாக கூறுகிறார்கள். ஆனால் மகாத்மா காந்தி, எனது தகப்பனர் ஜவஹர்லால் நேரு ஆகியோரைப் பற்றியும் கூட இது மாதிரிதான் முன்பு கூறப்பட்டது.

நிருபர் கேள்வி: பெரிய எதிர்க்கட்சிகள் இருப்பதும் பலமான மக்கள் கருத்து உருவாகியுள்ளதும்தான் இந்தியாவை அன்னிய ஆபத்திலிருந்து காப்பாற்றியதாக உங்களுடைய அரசியல் எதிரிகள் கூறுகிறார்கள். ஆனால் எதிர்க்கட்சிகளை சமாளிப்பதற்காக, ஏகாதிபத்திய ஆபத்து என்று நீங்கள் கூறிக் கொண்டிருக்கிறீர்கள்

பிரதமர் இந்திரா பதில் கூறியதாவது:

மத்திய அரசின் உறுதி, தயார் நிலை ஆகியவைதான் அன்னிய ஆபத்தை முறியடிப்பதில் இந்தியாவுக்கு உதவியுள்ளது. எதிர்க் கட்சிகளைச் சமாளிக்கும் நோக்கத்துடன் அன்னிய ஆபத்து பற்றி நான் குறிப்பிட்டதில்லை. ஆனால் எதிர்க் கட்சிகளின் நடவடிக்கைகள்தான் இந்தியாவின் ஒற்றுமைக்கும், நிலையான தன்மைக்கும் ஆபத்தாக விளங்கின என்றார் இந்திரா காந்தி.

## ரூ. 2 லட்சம் லஞ்சம் கேட்ட தி. மு. க. கவுன்சிலர்

சென்னை, ஏப். 14—மாநகராட்சிஆஜர்பட்டியல்மோசடி விவகாரத்தை மறைக்க தி.மு.க.கவுன்சிலர் எஸ்.எம். கிருஷ்ணன் 2 லட்ச ரூபாய் கேட்டார் என்ற விவரத்தை இன்று சாட்சியம் அளித்த கண்ணப்பன் வெளியிட்டார்.

16-வது நாளாக சாட்சியம் அளிக்கும்கண்ணப்பன் இன்று தொடர்ந்து கூறியதாவது:—

மாநகராட்சி வரி விதிப்புக் குழுத் தலைவரான எஸ். எம். கிருஷ்ணன் இந்த விவகாரத்தை சரிக்கட்ட 2 லட்சம் ரூபாய் கேட்டார்.

20 லட்ச ரூபாய் சம்பாதித்திருக்கிறீர்கள். 2 லட்சம் தரக் கூடாதா என்று கேட்டார். அப்போது மற்ற கவுன்சிலர்களும் உடனிருந்தனர்.

2 லட்சம் அதிகம் என்று சொன்னேம். பிறகு 50 ஆயிரத்துக்கு ஒப்புக்கொண்டார்கள்.

இந்த பேரம் நடந்தபோது அவர்கள் மது அருந்தி இருந்தனர் என்று கண்ணப்பன் தெரிவித்தார்.

## அம்பேத்கார் பிறந்த தினவிழா

சென்னை, ஏப். 14—அம்பேத்காரின் பிறந்த தினவிழா சென்னையில் பல இடங்களிலும் இன்று கொண்டாடப்பட்டது.

நேரு ஸ்டேடியத்தில் உள்ள அம்பேத்கார் சிலைக்கு சர்வ கட்சியினரும் இன்று மாலை அணிவித்தனர்.

முன்னாள் அமைச்சர் சத்தியவாணி முத்து, சிவசங்கரன், முன்னாள் மேயர் வை. பாலசுந்தரம், சக்திதாசன், சுந்தரராஜன், சாமிதுரை, ரத்தினராஜ், கிருஷ்ணன், பம்மல் நாகரத்தினம், மாசிலாமணி மற்றும் ஏராளமானோர் வந்து அம்பேத்கார் சிலைக்கு மாலையணிவித்தனர்.



### குடும்ப கட்டுப்பாடு

## ஐகோர்ட் தீர்ப்பு

சென்னை, 14—கட்டாய குடும்பக் கட்டுப்பாடு திட்டத்தை அரசு கொண்டுவரப் போவதாகத் தெரிகிறது என்றும், அது தனி நபர் உரிமையை பறிப்பதாகும் என்றும், அந்த திட்டத்தைக் கொண்டுவரக்கூடாது என்று அரசுக்கு ஐகோர்ட் உத்தரவிடவேண்டும் என்றும் தெரிவித்துசென்னை ஐகோர்ட்டில் ராயபுரம் சுந்தரம் ரிட் மனு போட்டார்.

அரசின் கொள்கை பொருத்த விஷயம் இது என்றும் இந்த விவகாரத்தில் ஐகோர்ட் தலையிடுவதற்கு இல்லை என்றும் தெரிவித்து மனுவை விசாரணைக்கு ஏற்றுக்கொள்ளாமலேயே நீதிபதி மோகன் தள்ளுபடி செய்தார்.

### சென்னைக்கு இன்னொரு அணிகலன்

## வள்ளுவர் கோட்டம்: ஜனதிபதி திறக்கிறர்

சென்னை, ஏப். 14— உள்நாட்டு வெளிநாட்டு சுற்றுலாப் பயணிகளைக் கவரத்தக்க வகையில் அமைக்கப்பட்டுள்ள வள்ளுவர் கோட்டத்தை ஜனதிபதி பக்ருதீன் அலி அகமது நாளை (15-ம் தேதி) மாலை திறந்து வைக்கிறார்.

சிங்காரச்சென்னைக்கு மற்றுமோர் அணிகலனக வள்ளுவர் கோட்டம் கட்டப்பட்டுள்ளது.

சுமார் 70 லட்ச ரூபாய்க்கு மேல் செலவிடப்பட்டு கட்டப்பட்டுள்ள இந்த வள்ளுவர் கோட்டம்கவின்-கலைக் காட்சி மண்டபமாக அமைக்கப்பட்டுள்ளது.

தமிழகத்தில் பண்டை சிறப்புக் கலையும், இன்றைய நவீன உத்திகளும் ஒருங்கிணைக்கப்பட்டு யாபெரும் கலைப்படைப்பாக இது அமைந்துள்ளது.

திருவாரூர்தேர் மாதிரியில் ஒரு கல்தேர் அமைக்கப்பட்டு அதன் முன்னே மிகப் பெரிய மண்டபமும் அமைக்கப்பட்டுள்ளது.

தென் கிழக்கு ஆசியாவிலேயே இவ்வளவு பெரிய மண்டபம் கிடையாது.

வள்ளுவர் கோட்டத்தின் நுழைவாயில் கம்பீரமாக கட்டப்பட்டுள்ளது. தோரண நுழைவாயில் என இதற்குப் பெயரிடப்பட்டுள்ளது.

அரங்க மண்டபத்திற்கு மேல் உள்ள மேடைத் தளமாடத்தில் 1330 குறளும் அழகிய சலவைக் கல்லில் எழுதப்பட்டு பதித்து வைத்த புத்தமாகக் காட்சி அளிக்கின்றன.

2700டன் எடையுள்ளதேர் அழகுக்கலை உமிழ அசைந்தாடி நகர்வது போல காட்சி அளிக்கிறது.

### திருவாரூர் தேர்

திருவாரூர்தேர் போலக் காட்சி அளிக்கும் இத்தேரின் உள்ளே 6¼ அடி உயர வள்ளுவர் சிலை அமைக்கப்பட்டுள்ளது.

கணபதி ஸ்தபதி இந்தச் சிலையை அமைத்துள்ளார். இதன் செலவு மட்டும் 80 ஆயிரம் ரூபாய்.

வள்ளுவர் எப்படி இருந்து இருப்பார் என்று ஆராய்ச்சி

(4-ம் பக்கம் பார்க்க)




## குடிசைவாழ் மக்களின் கோரிக்கை

சென்னை நகரின் புறநகர்ப் பகுதிகளான ஆவடி, அம்பத்தூர், மீனம்பாக்கம், தாம்பரம், பெருங்களத்தூர், போரூர் பகுதிகளில் லட்சத்திற்கு மேற்பட்ட குடும்பங்கள் அரசாங்கப் புறம்போக்கு நிலங்களில் குடிசைகள் போட்டு ஆண்டாண்டுக் காலமாக வசித்து வருகின்றன.

காந்தி நகர், நேரு நகர், காமராஜர் நகர், பக்தவத்சலம் நகர், கக்கன் நகர் என்று புறநகர்ப்பகுதிகளின் குடியிருப்புக்கள் பெயர் பெற்றிருப்பதிலிருந்தே எத்தனை ஆண்டுகளுக்கு முன்னர் இந்தக் குடியிருப்புக்கள் எழுந்தன என்பதனை அறியலாம்.

தி. மு. கழகத் தலைவர்களின் திருநாமங்களைக் கொண்ட பல குடியிருப்புக்களும் முன்னர் தேசியத் தலைவர்களின் பெயர்களையே தாங்கியிருந்தன. தங்கள் குடியிருப்புக்களுக்கு பெயர்களை மாற்றுவதால் பட்டாக் கிடைக்காதா என்ற ஏக்கத்தில் பலர் காமராஜர் நகரை கருணநிதி நகராக்கிப் பார்த்தனர்.

புறநகர்ப் பகுதிகளின் குடிசைப் பகுதிகளில் குடியிருப்பவர்கள் யார்?

ஏறத்தாழ முப்பதாண்டுகளாக இந்த குடியிருப்புக்களிலே வசிப்பவர்கள் ஏழை எளிய மக்கள்; ஆலைகளிலும் தொழிற்சாலைகளிலும் பணி செய்யும் தொழிலாளர்கள்; அரசு அலுவலகங்களிலும் தனியார் பணிமனைகளிலும், கடைகளிலும் வேலை செய்கின்ற கீழ்நிலை — நடுத்தர மக்கள்.

காமராஜர் முதலமைச்சராக இருந்தபோதும் பக்தவத்சலம் முதல்வராக இருந்தபோதும் பல குடியிருப்புப் பகுதிகளுக்கு பட்டாவழங்க நடவடிக்கை எடுக்கப்பட்டது. பட்டா வழங்குவதற்கான உத்தரவுகள் பிறப்பிக்கப்பட்டன. ஒரு செண்டுக்கு 13 ரூபாய் 60 பைசா என்று குடிசை வாழ் மக்கள் பணமும் செலுத்தினர் சில குடியிருப்புக்களின் சில பகுதிகளுக்கு பட்டா வழங்கப்பட்டது. என்ன காரணத்தாலோ பணம் செலுத்தியும் பல பகுதிகளுக்கு பட்டா கிடைக்கவில்லை.

வளரும் சென்னை நகரைச் சுற்றி இருபது மைல் பரப்பளவிற்கு பட்டாக்கள் கொடுக்கக் கூடாது என்று தடை இருந்தது தாமதம் என்று கூறுகிறார்கள் ஆனல் வசதி படைத்தவர்கள் ஆலைகளின் பெயரால், கம்பெனிகளின் பெயரால் பலப்பல ஏக்கராக்களுக்குப் பட்டாப்பெற்று வந்தனர்.

இருக்கின்ற தடையை எடுத்தெறிந்துவிட்டு ஏழை எளிய மக்களுக்குக் குடிமனைப் பட்டாக் கொடுக்க வேண்டும் என்று அன்றைய தி.மு கழகப் பொருளாளரும், இன்றைய அண்ணா தி.மு.கழக பொதுச் செயலாளருமான எம்.ஜி.ஆர். அவர்கள் கழக அமைச்சர்களைக் கேட்டுக்கொண்டார்.

ஏனெனில் அவர் இருமுறை வெற்றிகண்ட பரங்கிமலைத் தொகுதியிலேயே பல்லாயிரம் குடும்பங்கள் பல்லாண்டுகளாக குடிமனைப்பட்டா பெறாது வசித்து வருகின்றன ஆனல் அவர் சென்னை நகரின் எல்லா புறநகர் பகுதிகளிலும் வசிக்கும் ஏழைகளுக்கு குடிமனைப் பட்டா கொடுக்க வேண்டும் என்று வலியுறுத்தி வந்தார்.

ஆனல் அண்ணதி. மு. கழகம் தோன்றிய பின்னர்தான் தடையை நீக்கி குடிசை வாழ் மக்களுக்குப் பட்டா வழங்குவது என்று தி. மு. கழக அரசு தீர்மானித்தது. 1972-ம் ஆண்டு ஜூன் மாதம் வரை குடிசைகள் போட்டுக் குடியிருக்கும் மக்களுக்கு பட்டா வழங்குவதற்கு அதே ஆண்டு டிசம்பர் 30 ம் நாள் தி. மு. கழக அமைச்சரவை முடிவெடுத்தது.

இப்படிப் பட்டாக் கொடுத்தாவது ஏழை எளிய மக்களை தங்கள் பக்கம் படை திரட்டிக் கொள்ள முடியாதா என்ற ஏக்கப் பெருமூச்சில் எடுத்த இந்த முடிவை அவசர அவசரமாக அள்ளித் தெளித்த கோலத்தில் செயல்படுத்த முனைந்தனர்.

அமைச்சர் வருகிறார், ஆயிரம் பட்டா தயார்செய், இரண்டாயிரம் பட்டா எழுதிவை என்று உத்தரவுகள் பறந்தன

பத்திரிகைகளில் பக்கம்பக்கமாக விளம்பரங்கள் நர்த்தனமாடின.

பட்டா கொடுக்கும் விழாக்கள் வாணவேடிக்கைகளுடன் நடந்தன.

(நாளை)

## இந்திரா-மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர்கள் சந்திப்பு

புதுடெல்லி. ஏப். 14—பிரதமர் இந்திராவை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர்கள் சந்தித்துப் பேசினர்.

கடந்த வெள்ளிக்கிழமையன்று இந்தச் சந்திப்பு பிரதமரின் இல்லத்தில் நடந்தது.

இ. எம். எஸ். நம்பூதிரிபாட், ஏ. கே. கோபாலன், பி ராமமூர்த்தி, ஜோதிபாசு, ஹரிகிருஷ்ணசிங் சுர்ஜித் ஆகியோர் பிரதமரைச் சந்தித்து 30 நிமிடநேரம் பேசினர்.

நாட்டில் அவசர நிலைப் பிரகடனம் அறிவிக்கப்பட்ட பின்னர் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர்கள் பிரதமர் இந்திராவைச் சந்திப்பது இதுவே முதன் முறையாகும்.

இன்றைய அரசியல் நிலை பற்றி தங்கள் கருத்துக்களைக் கூறிய அவர்கள் பிரதமரிடம் ஒரு மனுவையும் கொடுத்தனர்.

# ரூ. 2 லட்சம் சாராயம் பறிமுதல்: 412 பேர் கைது

வேலூர், ஏப். 14— மலைப் பகுதியில் போலீசார் பயங்கர சாராய வேட்டை நடத்தி ரூ. 2 லட்சம் பெறுமானமுள்ள சாராயத்தைக் கைப்பற்றினர். இதைத் தொடர்ந்து 412 பேர் கைது செய்யப்பட்டார்கள்.

வட ஆற்காடு மாவட்ட போலீஸ் சூப்பிரெண்டெண்ட் தேவாரம் தலைமையில் சுமார் 100 போலீஸ் அதிகாரிகள் வேலூர் குடியாத்தம் பகுதியில் உள்ள மலைப்பகுதிகளில் பயங்கர சாராய வேட்டையை நடத்தினர்.

மலைப்பகுதிகள், காட்டுப் பகுதிகள் மற்றும் உறைவிடங்கள் பலவற்றை போலீசார் சோதனையிட்டனர்.

நள்ளிரவில் நடந்த இந்தச் சோதனையில் கள்ளச்சாராயம் காய்ச்சியதாக 412 பேர்கள் கைது செய்யப்பட்டனர். ரூ. 2 லட்சம் பெறுமானமுள்ள கள்ளச்சாராயத்தையும் போலீசார் கைப்பற்றினர்.

தமிழ்நாட்டில் மதுவிலக்கு சட்டம் அமுலபடுத்தப்பட்ட பிறகு மிகப்பெரிய அளவில் சாராயம் கைப்பற்றப்பட்டதும், அதிகமான பேர் கைது செய்யப்பட்டதும் இதுவே முதல் தடவையாகும் என்பது குறிப்பிடத்தக்கது.

இந்தச் சோதனைக்கு முழுப் பொறுப்பான போலீஸ் டி. ஐ. ஜி. பழநிவேலு கள்ளச் சாராயம் பற்றிய தகவல்களை போலீசாருக்கு அவ்வப்போது கொடுக்குமாறு பொது மக்களை கேட்டுக்கொண்டுள்ளார்.

# பருவதராஜ குல சங்கம்

சென்னை, ஏப். 14-சென்னை மாகாண பருவத ராஜ குல சங்கத்தின் செயற்குழுக் கூட்டம் சிந்தாதிரிப்பேட்டையிலுள்ள சங்கக் கட்டிடத்தில் நடைபெற்றது.

இந்த செயற்குழு கூட்டத்திற்கு எம். எல்லப்பநாட்டார் தலைமை வகித்தார்.

# மின்சார திருட்டு: என்ஜினியர்களுக்கு பந்த் வேண்டுகோள்

சென்னை, ஏப். 14—மின்சார கம்பிகளில் இருந்து மின்சாரம் திருடப்படுவதை தடுக்க இளநிலை பொறியாளர்கள் நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று மத்திய மந்திரி கே. சி. பந்த் வேண்டுகோள் விடுத்தார்,



தமிழ்நாடு மின்வாரிய என்ஜினியர்கள் சங்கப் பிரதிநிதிகள் மத்திய மின்சார அமைச்சர் கே. சி. பந்தை சந்தித்தனர்.

சபாபதி, கந்தப்பன், ஹரிதாஸ், செங்கோட்டையன் ரத்தினம், நவநீதகிருஷ்ணன் ஆகியோர் இந்தக் குழுவில் இடம் பெற்றிருந்தனர்.

தமிழ்நாடு காங்கிரஸ் பொதுச் செயலாளர்களான திண்டிவனம் ராமமூர்த்தி, டி. என். அனந்தநாயகி, ப. சிதம்பரம் ஆகியோர் அமைச்சருடன் இருந்தனர்.

என்ஜினியர்கள் சங்கத்தின் சார்பில் பின்கண்ட யோசனைகள் கூறப்பட்டன.

1. மாநில மின்வாரியத்தை மாற்றியமைப்பது.

2. மின்சார வாரிய வரவு செலவுகளைப் பரவலாக்குதல்.

3. மின்சாரக் கம்பிகளில் இருந்து மின்சாரம் திருடப்படுவதை தடுக்க நடவடிக்கைகள் எடுப்பது.

4. இளநிலை பொறியாளர்களின் தகுதி நிலையை துணை என்ஜினியர்களாக மாற்றி அமைப்பது.

5. இளநிலை பொறியாளர்களுக்கும் துணை பொறியாளர்களுக்கும் இடையே அந்தஸ்தில் இருக்கும் தேக்கத்தை போக்குதல்.

6. என்ஜினியர்களின்சம்பள விகிதத்தை மாற்றி அமைத்தல்.

7. பேச்சுவார்த்தை நடத்த நிரந்தர அமைப்பு ஒன்றை ஏற்படுத்துதல்.

என்ஜினியர்களின் கோரிக்கைகளை பொறுமையாக செவிமடுத்த பந்த் கூறியதாவது:—

அனல்மின் நிலையத்தில் மின்சார உற்பத்தி அதிகரித்து இருந்தபோதிலும் இந்தத் துறையை மேம்படுத்தப் பல நடவடிக்கைகளை எடுக்க வேண்டியுள்ளது. மின்சாரத் திருட்டை தடுக்க உரிய நடவடிக்கைகளை என்ஜினியர்கள் எடுக்கவேண்டும் என்றார் பந்த்.

# ரூ. 1 லட்சம் கள்ள நோட்டுகள் பிடிபட்டன

தார்வார், ஏப். 14—கள்ள 20 ரூபாய்நோட்டுகளை அச்சடிக்கும் ஒரு ரகசிய தொழிற்சாலை கண்டுபிடிக்கப் பட்டது. அங்கு சுமார் ஒரு லட்சம் ரூபாய் மதிப்புள்ள கள்ள 20 ரூபாய் நோட்டுகள் பிடிபட்டன. ஒரு கார், 2 துப்பாக்கிகள் ஆகியவை பறிமுதல் செய்யப்பட்டன. இது சம்பந்தமாக 4 பேர் கைது செய்யப்பட்டனர்.

தார்வார் நகருக்கு அருகே உள்ள சுரக் நகரில் இந்த சம்பவம் ஏற்பட்டது.

# ஐ என்.டி.யு.சி. சங்கத்தில் இணைக: மூப்பனார் அழைப்பு

மதுரை, ஏப். 14—காங்கிரஸ் கட்சியிடம் பற்றும் பாசமும் கொண்ட தொழிலாளர் சங்கங்கள் தேசிய தொழிற்சங்கமான ஐ. என். டி. யு. சி. யுடன் இணைந்து செயல்பட வருமாறு காங்கிரஸ் தலைவர் மூப்பனார் அழைப்பு விடுத்தார்.

மதுரையில் நடைபெற்ற டி. வி. எஸ். தொழிற் சங்கத்தின் 27-வது ஆண்டு விழாவைத் துவக்கிவைத்து மூப்பனார் பேசுகையில் இந்த அழைப்பை விடுத்தார்.

இந்த விழா மதுரை ரீகல் கலையரங்கில் நடந்தது.

அந்த விழாவில் மூப்பனார் பேசுகையில் தொழிலாளர் நலனுக்காக தமிழ்நாடு காங்கிரசில் ஒரு தனிக்குழு அமைக்கப்படும் என்று அறிவித்தார்

தொழிலாளி — முதலாளி உறவு சுமுகமாக இருக்க இந்த அமைப்பு செயல்படும் என்றும் அவர் கூறினார்.

இந்தியாவிலேயே இத்தகைய அமைப்பு முதன்முதலாக தமிழ் நாட்டில் அமைக்கப்படுவதாக மூப்பனார் தெரிவித்தார்.

ஐ. என். டி. யு. சி. தலைவரான ஜி. ராமானுஜத்தின் சேவையை மூப்பனார் பாராட்டினார். பெரிய பிரச்னையையும் சுமுகமாக தீர்க்கும் வல்லமைபடைத்தவர் என்று பாராட்டினார்.

விழாவிற்கு ஜி ராமானுஜம் தலைமை வகித்தார். காங்கிரஸ் பொருளாளர் ராஜாராம் நாயுடு கொடி ஏற்றி வைத்தார். ஜெயராமன் வரவேற்புரை நிகழ்த்த பொம்மையா ஆண்டறிக்கை படித்தார்.

## நெடுமாறன்

இந்த விழாவில் காங்கிரஸ் செயலாளர் ப. நெடுமாறன் பேசியபோது சோதனையான ஒரு கட்டத்தில் தலைமைப் பொறுப்பை மூப்பனார் ஏற்றுள்ளார் என்றார். தமிழ் நாட்டில் 9 ஆண்டு காலம் இருள் சூழ்ந்து இருந்தது. அவர் தலைமையில் காங்கிரசும் ஐ. என். டி. யு. சி. யும் இணைந்து செயல்படும் என்றும் நெடுமாறன் தெரிவித்தார்.

# சட்ட மாமேதை டாக்டர் அம்பேத்கார்

—: வை. பாலசுந்தரம் :—

ஏற்றத் தாழ்வற்ற சமுதாயத்தை உருவாக்க அரசு கொடுத்த சட்ட மேதை டாக்டர் அம்பேத்காரின் புதுமை கருத்துக்கள் புது வடிவெடுத்து புரட்சிக கீதங்களாய் இந்திய திருமண்ணில் இசைப்பாடத் துவங்கிவிட்டன. தாழ்த்தப்பட்ட சமுதாயத்தின் இளைய தலைமுறையினரின் எண்ணங்களில் அம்பேத்காரின் புகழ் மிக்க மதாண்டு அழியா இடம் பெற்றுவிட்டது. நலிந்துபோன மக்களின் தரித்திரத்தைத் துடைக்க, தாழ்த்தப்பட்ட மக்களின் சரித்திர நாயகன் அண்ணல் அம்பேத்கார் அனுபவித்த கொடுமைகள் கலங்காத நெஞ்சத்தையும் கலங்க வைக்கும். மத வெறியர் மதப் போக்கும், சாதி வெறி பிடித்த வீணர்கள் விளையாடிய விளையாட்டில் அவர் அனுபவித்த வேதனைகள் சுமையும் என்றும் மறக்க முடியாத ஒரு நிலையாகும்.

ஆண்டவன் பிறப்பில் அனைவரும் சமம் என்ற தத்துவத்தைப் பரப்பும் நம்நாட்டில் உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற பாகுபாடுகளை உணர்த்தும் ஜாதி வெறியை தூண்டும் கேடுபாடுகளைக் களைய, தாழ்த்தப்பட்ட மக்களுக்கென்று அண்ணல் அம்பேத்கார் அவதாரம் எடுத்து வந்தவர் என்றால்கூட அதனை உண்மை என்று உலகம் ஒத்துக்கொள்ளத்தான் செய்யும். ஏழைக் குடும்பத்தில் பிறந்த அம்பேத்கார் சென்ற இடமெல்லாம் சிறப்பைப் பெற்றார். அவர் இருந்தபொழுது இருந்த புகழைவிட அவர் மறைந்தபிறகு பெருகியுள்ள புகழைக் காணும்போது மக்களைத் தலைநிமிர்ந்து நடக்க வைக்கிறது.

அடித்தளத்து மக்களுக்காக அவரால் உருவாக்கப்பட்ட சட்டப் பாதுகாப்பு தாழ்த்தப்பட்டோரின் இல்லங்களில் ஏற்றி வைக்கப்பட்ட அணையாத தீபமாகும். வாழ்விழந்த மக்களின் இல்லங்களில் விளக்கேற்றிய அம்பேத்கார் அந்த மக்களின் உள்ளங்களில் ஒளிவிடுகின்றார் என்பதை மனித உரிமைபெற்ற இந்தச் சமுதாயம் மறக்க முடியாது. தாழ்த்தப்பட்ட மக்களுக்கு அண்ணல் அம்பேத்கார் வாங்கி வழங்கிய சலுகை என்னும் உரிமை, எந்த ஆட்சியாயினும் மகுடம் சூட்டத் தக்க மாட்சிமை தங்கிய மகத்தான கொள்கையாகும். பிறந்த சமுதாயத்தின் மேன்மைக்காக துன்பங்களைச் சுமையாக சுமந்த அம்பேத்கார், அவர்களுக்காகத் தன்னை மெழுகுவர்த்தியாக்கிக் கொண்டார். கரைகின்ற மெழுகுவர்த்தி, ஒளியை வாரி வழங்கும்போது கிடைக்கின்ற பயனைப்போல், இன்றைக்குத் தாழ்த்தப்பட்ட சமுதாயத்து மக்கள் வளமான வாழ்க்கையில் நலமாக வாழ இனிய வாழ்வை இந்த மக்கள் நாடிச் செல்ல அவரால் ஏற்றிவைக்கப்பட்ட ஒளி ஒன்று வழிகாட்டுகிறது. தீண்டாமை என்னும் தீய நாகம் தாழ்த்தப்பட்டவர்களைத் தீண்டாமல் காக்கவும், சாதி வெறி பிடித்த வஞ்சகர்களின் கொடுமையிலிருந்து அந்த மக்களை மீட்கவும், சட்டத்தின் மூலம் தீர்வு கண்டார் மேதை அம்பேத்கார்.

சமதர்மம் தழைக்கவும் பிழைக்கவும் வழி செய்தால் தான் இந்திய சரித்திரத்தில் புகழ் என்றும் எங்கும் மணக்கும் என்றார். மங்கிப்போன மக்களின் வாழ்க்கையில் மறுமலர்ச்சி காண ஒரு மகத்தான மாற்றம் தேவை என்ற வாதமெல்லாம், அழிக்க முடியாத பொன்மொழிகளாகும். இங்கிலாந்தில் நடைபெற்ற இரு வட்டமேஜை மாநாடுகளில் தாழ்த்தப்பட்டோரின் பாதுகாப்பிற்கு அவர் ஆற்றிய உரை, தாழ்த்தப்பட்டோரின் சரித்திரத்தில் எழுச்சி மிகுந்த புதிய அத்தியாயமாகும். இதைத் தொடர்ந்து இந்த மக்களின் நல்வாழ்வில் நாட்டம் கொண்டு, அவர்தம் வாழ்விற்கு வழிசெய்ய வகை செய்யப்பட்ட, புகழ்மிக்க 'பூனா ஒப்பந்தம்' என்பதும் தாழ்த்தப்பட்ட மக்களின் வாழ்வில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டியதாகும். புனர்வாழ்வை, புதுவாழ்வாய் தாழ்த்தப்பட்ட மக்களுக்குப் பெற்று தந்தார் அம்பேத்கார். புனிதமான தத்துவங்களை விளக்கிக் காட்டும் புத்தபிரான் கொள்கைகளை சித்தாந்தமாக்கிக்கொண்ட இந்த புனிதமகான் அம்பேத்கார் உலகம் இருக்கும் வரை தாழ்த்தப்பட்ட மக்கள் மனதில் குல தெய்வமாய் குடியிருப்பார். இந்ததெய்வத்தை வணங்கி, வழிபட்டுப் போது வுடைமைப்பூங்காவை இந்திய மண்ணில் மலரச் செய்ய உழைப்பின் துணை கொண்டு உயர்வினைக்காண புதிய சகாப்தம் படைப்போம்.

# பி. ராமச்சந்திரன் சுற்றுப்பயணம்

சென்னை, ஏப். 14—பழைய காங்கிரஸ் தலைவர் பி. ராமச்சந்திரன் சேலம் செல்கிறார். ஏப். 16ம் தேதி சேலத்திலும் 17ம்தேதி ஜோலார்பேட்டை திருப்பத்தூர், வாணியம்பாடி, ஆம்பூர் ஆகிய ஊர்களிலும், 18ம் தேதி காஞ்சிபுரத்திலும் நிகழ்ச்சிகளில் கலந்துகொள்வார்.

ராமச்சந்திரனுடன் குமரி அனந்தன், ராதாகிருஷ்ணன் எம். பி., வி. தண்டாயுதபாணி ஆகியோரும் சுற்றுப் பயணம் செய்வர்.

மெய்வழிச்சாலை

# ஆண்டவர் சீடர் வீட்டில் திடீர் சோதனை

திருச்சி, ஏப். 14—திருச்சியில் இருக்கும் அனந்தர் ஒருவர் வீட்டில் சுங்க இலாகா அதிகாரிகள் திடீர் சோதனை நடத்தினார்கள்.

மெய்வழிச்சாமியின் சீடர்கள் வீடுகளில் தங்கம் ஒளித்து வைக்கப்பட்டிருக்கலாம் என்ற சந்தேகத்தின் பேரில் சுங்க இலாகா அதிகாரிகள் அனந்தர்கள் வீடுகளில் சோதனை நடத்தி வருவது தெரிந்தது.

நேற்று நடந்த சோதனை மெய்வழிச்சாலைக்கு வெளியே நடந்த 6-வது சோதனையாகும்.

மெய்வழிச்சாலையில் நேற்று மேலும் பல இடங்கள் தோண்டப்பட்டன.

அனந்தர்கள் தியானம் செய்யும் தவமாளிகையிலும் சோதனை நடத்தப்பட்டது. மின் காந்த கருவிகளை கொண்டு அதிகாரிகள் சோதனை நடத்தினர்.

மெய்வழிச்சாலையில் வசிக்கும் அனந்தர்களிடம் தொடர்ந்து அதிகாரிகள் விசாரணை நடத்தினர்.

மெய்வழிச்சாலையில் ஆண்டவர் சமாதிமேல் மணல் மட்டும் பரப்பப்பட்டிருக்கின்றது.

சமாதிமேல் ஏன் கட்டிடம் கட்டப்படவில்லை என்று அதிகாரிகள் கேட்டதற்கு 'ஆண்டவர் மீண்டும் உயிர்த்துஎழுந்து வருவார் என்று நாங்கள் நம்புகிறோம்' என்று அனந்தர்கள் பதில் கூறினார்களாம்.

மெய்வழிச்சாலைக்குவெளியே மேலும் பல இடங்களில் சோதனைகள் தொடர்ந்து நடைபெறும் என்று தெரிகிறது.

தாலிக் கயிற்றால்

# கழுத்தை நெறித்து இளம்பெண் கொலை: மாஜி காதலன் கைது

கிருஷ்ணகிரி, ஏப். 14—தாலிக் கயிற்றால் கழுத்து நெறிக்கப்பட்டு இளம்பெண் ஒருத்தி படுகொலை செய்யப்பட்டாள். இது சம்பந்தமாக அந்தப் பெண்ணின் மாஜி காதலன் என்று கூறப்படும் வாலிபர் ஒருவரைப் போலீசார் கைது செய்தனர்.

கிருஷ்ணகிரியை அடுத்த காட்டினம்பட்டியில் இந்தச் சம்பவம் நடந்தது.

இது குறித்த விவரமாவது: காட்டினம்பட்டியைச் சேர்ந்தவர் சின்னபிள்ளை, வயது 28. இவருக்கும் அந்த ஊரைச் சேர்ந்த வெங்கடம்மாள் என்ற 16 வயது பெண்ணுக்கும் காதல் இருந்ததாகக் கூறப்படுகிறது.

சுமார் 15 மாதங்களுக்கு முன்பு சின்ன பிள்ளைக்கும் காந்தா என்ற வேறொரு பெண்ணுக்கும் திருமணம் நடந்தது.

9 மாதங்களுக்கு முன்பு வெங்கடம்மாவுக்கும் வேறொருவருடன் திருமணம் நடந்தது. அவள் வேளாங்காடு கிராமத்தில் உள்ள தனது கணவரின் கிராமத்துக்குச் சென்றுவிட்டாள். இதனால் சின்னபிள்ளை—வெங்கடம்மாள் காதல் அறுந்துவிட்டது.

சிறிது நாட்களுக்கு முன்பு வெங்கடம்மாள் காட்டினம்பட்டியில் உள்ள தனது தாய் வீட்டிற்கு வந்திருக்கிறாள். அப்போது அவள் வேறு ஒரு வாலிபருடன் பேசிக்கொண்டிருப்பதை சின்னபிள்ளை பார்த்தார்.

முன்னாள் காதலனாக இருந்தாலும் சின்னபிள்ளையால் இதைப் பொறுக்க முடியவில்லை.

இது பற்றி ஒரு புளிய மரத்தடியில் சந்தித்து வெங்கடம்மாளை சின்னபிள்ளை கண்டித்தார்.

தனக்கு வேண்டியவள் என்ற உரிமையுடன் வெங்கடம்மாளின் கன்னத்தில் சின்னபிள்ளை அறைந்ததாகவும் கூறப்படுகிறது. இதனால் அவள் மயங்கி விழுந்தாள். பிறகு அவளது தாலிக் கயிற்றால் கழுத்தை இறுக்கிக் கொன்று விட்டதாகக் கூறப்படுகிறது.

## கிணற்றில் பிணம்

பிறகு வெங்கடம்மாளின் உடலில் இருந்த நகைகளை எல்லாம் எடுத்துவிட்டு வயிற்றில் கல்லைக் கட்டி பிணத்தை ஒரு கிணற்றில் போட்டாராம்.

திருடிய நகைகளை ஒரு மாட்டுக்கொட்டகையில் புதைத்ததாகவும் அடகுக் கடையில் விற்றதாகவும் கூறப்படுகிறது. பிறகு தலைமறைவாகிவிட்டாராம.

மகளைக் காணாத வெங்கடம்மாளின் தந்தை போலீசில் புகார் செய்தார்.

இதற்கிடையில் குளம் கிணறுகளிலும் தேட ஆரம்பித்தார். அப்போது வெங்கடம்மாளின் சடலம் கண்டு பிடிக்கப்பட்டது.

தகவல் அறிந்த போலீசார் பரிசோதனைக்காக பிணத்தை கைப்பற்றி மருத்துவ மனைக்கு அனுப்பி வைத்தனர். கழுத்தில் கயிறு இறுக்கப்பட்டதால் மரணம் ஏற்பட்டதாக டாக்டர்கள் சான்றிதழ் அளித்தனர்.

இது தொடர்பாக போலீசார் தீவிர புலன் விசாரணை செய்து சின்ன பிள்ளையைக் கைது செய்தனர்.

திருடப்பட்டதாகக் கூறப்படும் நகைகள் மீட்கப்பட்டதாகத் தெரிகிறது.

தொடர்ந்து புலன் விசாரணை நடைபெற்று வருகிறது.

# குடிசைமாற்று வாரிய குடியிருப்போர் சங்கம்

சென்னை, ஏப். 14—தமிழ் நாடு குடிசை மாற்றுவாரிய குடியிருப்போர் பொது நல மன்றம் கூட்டமைப்புப் பேரவைக் குழுவினர் தமிழக கவர்னரின் ஆலோசகர் ஆர். வி. சுப்பிரமணியத்தை சந்தித்துப் பேசினர்.

கடந்த 1972ம் ஆண்டு முதல் 1976-ம் ஆண்டு மார்ச் மாதம்வரை முன் அறிவிப்பு இன்றி நிர்ணயித்த வாடகை பாக்கியை தள்ளுபடி செய்யும்படியும், அரசு அலுவலகத்தில் பணி செய்யும் ஊழியர்களின் வீடுகளுக்கு குடிதண்ணீர் மின்வசதி செய்தபின் மாத வாடகை 20 ரூபாய் வசூலிக்கும்படியும் சாதாரண மக்களின் குடியிருப்புகளுக்கு 15 ரூபாய் வாடகை நிர்ணயிக்கும்படியும் அவர்கள் கோரியுள்ளனர்.

எம். குப்புசாமியின் தலைமையில் பி. தேவராஜ், சம்பந்தம் மற்றும் பல அங்கத்தினர்கள் அந்த குழுவில் இருந்தனர்.

# சாமி சிலை திருட்டு: அதிகாரி தலைமறைவு

விருதுநகர், ஏப். 14—சுமார் 3 லட்சம் ரூபாய் மதிப்புள்ள 8 சாமி சிலைகள் விருதுநகரில் கைப்பற்றப் பட்டன. இது சம்பந்தமாக மத்திய சுங்க அதிகாரி ஒருவர் உள்பட 3 பேர்களை போலீசார் தேடிவருகிறார்கள்.

இது சம்பந்தமாக ஒரு பட்டதாரி உள்பட 3 போர்களை போலீசார் ஏற்கனவே கைது செய்தனர்.



மத்திய அரசு பதவிகள்:

# தாழ்த்தப் பட்டோர் எண்ணிக்கை உயர்வு

புதுடெல்லி, ஏப். 14—மத்திய அரசின் உயர்பதவிகளான ஐ. சி. எஸ்., ஐ. ஏ. எஸ்., ஐ. பி. எஸ். பதவிகள் வகிக்கும் தாழ்த்தப்பட்டோர், மலைஜாதி மக்களின் எண்ணிக்கை கடந்த 5 ஆண்டுகளில் பெருமளவு உயர்ந்து இருக்கின்றது.

மத்திய அரசின் உள்துறை அமைச்சகத்தின் 1975 76ம் வருடத்திற்கான ஆண்டறிக்கையில் இந்த விவரம் தெரிவிக்கப்பட்டுள்ளது.

ஐ. சி. எஸ்., ஐ. ஏ. எஸ். அதிகாரிகளாக 1970-ல் 181 தாழ்த்தப்பட்ட வகுப்பினர் இருந்தனர். 1975ல் இத்தொகை 262 ஆக உயர்ந்தது. இப்பதவிகள் வகித்த மலைஜாதியினர் தொகை 1970ல் 73 ஆக இருந்தது. 1975ல் இத்தொகை 116 ஆக உயர்ந்தது.

இந்திய போலீஸ் சர்வீசில் தாழ்த்தப்பட்டோரின் தொகை 97லிருந்து 14[illegible] ஆகவும், மலைஜாதியினர் தொகை 27லிருந்து [illegible]8 ஆகவும் உயர்ந்துள்ளது.

# அவசர நிலை எப்போது நீங்கும்? இந்திரா பேச்சு

ரேபரேலி, ஏப். 14—அவசர நிலை எப்போது நீங்கும் என்பதுபற்றி பிரதமர் இந்திரா காந்தி பேசி இருக்கிறார்.

உத்திரப்பிரதேசத்திலுள்ள ரேபரேலி தொகுதியில் பிரதமர் பேசினார்.

அவர் பேசியதாவது:—

தங்களுக்கு வன்முறையில் நம்பிக்கை இல்லை என்பதை எதிர்க் கட்சிகள் நிருபணம் செய்ய வேண்டும்.

மக்கள் கருத்துதான் ஜனநாயகத்தின் அடிப்படை. பத்திரிகைகள் என்ன கூறுகின்றன என்பது ஜனநாயகமல்ல அல்லது தேர்தலை நடத்துவது மட்டும் ஜனநாயகமல்ல.

வன்முறைக்கு ஆதரவாக பிரச்சாரம் செய்தவர்கள் சரியாக நடந்து கொண்டாலே அவசரநிலை பற்றி பரிசீலனை செய்ய முடியும்.

அவசர நிலை அறிவிக்கப்படுவதற்கான சூழ்நிலை நாட்டில் இருந்தது. அவசரநிலை அறிவிக்கப்பட்டது.

எதிர்கட்சிகள் வன்முறையற்ற சூழ்நிலையை உருவாக்கினால் அவசர நிலையை நீக்குவது பற்றி சிந்திக்க முடியும்.

இவ்வாறு பிரதமர் இந்திரா பேசினார்.

# எக்ஸ்பிரஸ் தபால் ஞாயிறு பட்டுவாடா: மீண்டும் ஆரம்பம்?

கும்பகோணம், ஏப். 14— ஞாயிற்றுக்கிழமைகளில் எக்ஸ்பிரஸ் தபால் பட்டுவாடா முறையை மீண்டும் துவங்குவதுபற்றி பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது.

தமிழ்நாடு போஸ்ட் மாஸ்டர் ஜெனரல் எம். ஜானகிராமன் இந்த தகவலை, கும்பகோணம் நகரில் நிருபர்களிடம் வெளியிட்டார்.

சென்னையில் மத்திய தபால் பிரிக்கும் அலுவலகத்தில், தபால்களைத் துரிதமாக பிரிப்பதற்காக விசேஷ சாதனங்கள் அங்கு விரைவில் பயன்படுத்தப்படும் என்றும் அவர் சொன்னார்.

# இந்தியா மீட்டர் தொழிற்சாலை: அரசு ஏற்கக் கோரிக்கை

சென்னை, ஏப். 14—இந்தியா மீட்டர் தொழிற்சாலையை அரசோ அல்லது மின்சார வாரியமோ ஏற்று நடத்த வேண்டும் என்று இந்தியா மீட்டர் தொழிலாளர் சங்கம் வேண்டுகோள் விடுத்துள்ளது.

அந்த சங்கத்தின் இணைச் செயலாளர் து. வேணுகோபால் வெளியிட்டுள்ள அறிக்கை ஒன்றில் இதுபற்றி குறிப்பிட்டுள்ளார்.

அதில் கூறப்பட்டுள்ளதாவது:—

750 தொழிலாளர்கள் வேலைசெய்தஇந்தியா மீட்டர் தொழிற்சாலை கடந்த 20 மாதங்களாக லே-ஆப்பில் இருந்துவருகிறது.

இந்தக் காலத்திற்கான-லே-ஆப் ஊதியம் தொழிலாளர்களுக்குக்கொடுக்கப்படவில்லை.

இதுபற்றி ஆராய அமைக்கப்பட்ட மூவர்குழு எந்தவித முடிவையும் எடுக்கவில்லை.

750குடும்பங்களும்சொல்ல முடியாத துன்பங்களை அனுபவித்து வருகின்றன. ஆகவே இந்தத் தொழிற்சாலையை அரசே எடுத்து நடத்தவேண்டும் அல்லது மின் வாரியமே ஏற்று நடத்தி 750 தொழிலாளர்களுக்கும் வாழ்வு தர வேண்டும் என்று கேட்டுக் கொண்டுள்ளார்.

# 2 வேளை கூழுக்கு அடிமையான தொழிலாளி

## விடுதலைக்குப் பின்னர் அளித்த நெஞ்சை உலுக்கும் பேட்டி

(நமது சிறப்பு செய்தியாளர் சேரன் தம்பி)

**புதுவை, ஏப். 14—தென் ஆற்காடு மாவட்டத்தில் மீட்கப்பட்ட கொத்தடிமைகளுக்கு மறுவாழ்வு அளிக்க தமிழக அரசு தீவிர நடவடிக்கை எடுத்து வருகிறது. இதனடிப்படையில் ஆளுக்கு 2 ஏக்கர் நிலமும், ரூபாய் 2 ஆயிரமும் வழங்கப்படுகிறது.**

தென் ஆற்காடு மாவட்டம் உளுந்தூர்பேட்டை தாலுகா பூ. கொனலவாடி கிராமத்தில் ஆண்டாண்டு காலமாக பண்ணையடிமைகளாக இருந்து வந்த 14 கொத்தடிமைகளை தமிழக அரசு அதிகாரிகள் தீவிர நடவடிக்கைகளையொட்டி மீட்கப்பட்டதைத் தொடர்ந்து நமது நிருபர் மேலும் விவரங்கள் கேட்டறிய பூ. கொனலவாடி கிராமத்துக்கு சென்று அடிமைப்பட்டுக் கிடந்த அந்த உழைக்கும் மக்களை நேரில் சந்தித்து, விவரங்கள் சேகரித்துள்ளார். பல நெஞ்சுருக்கும் தகவல்கள் கிடைத்துள்ளன.

### பத்திரத்தில் இருந்தது என்ன?

ஆண்டாண்டு காலமாக கொத்தடிமைகளாக நடத்தப்பட்ட அரிஜன மக்களாகிய விவசாய தொழிலாளர்கள் பதிவு செய்யப்பட்ட முறிகளின்மூலம் அவர்கள் அடிமைப்படுத்தப்பட்டிருந்தார்கள். சில ரூபாய்களுக்காகவும், 2 வேளை கூழுக்காகவும் பண்ணையடிமைகளாக்கப்பட்ட கிராமப்புற உழைக்கும் மக்கள் எழுதிக்கொடுத்து பத்திரப் பதிவு செய்யப்பட்ட பத்திரத்தில் கண்டுள்ள திடுக்கிடும் தகவல்கள் வருமாறு:

1920-ம் வருஷம் மே மாதம் 21-ந் தேதி புஸ்தகம் 1 வால்யூம் 275 பக்கம் 1920-1921-ல் ரிஜிஸ்டர் செய்யப்பட்ட டாக்குமெண்டின் நகல்:

1920-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 24-ம் தேதி திருக்கோயிலூர் தாலுக்கா கொனலவாடி நத்தமன்னூர் பயிர் அருணகிரி உடையார் குமாரர் ராமலிங்க உடையாருக்கு மேற்படியூர் பறையன் பயிர் பெரிய செவிடன் மகன் மத்தாளி, எழுதிக் கொடுத்த படியாள் அடிமை முறி ஈடுகாட்டி தங்களிடம் படியாள் அடிமை சாதினமாக விட்டு கடன் பத்திரம் என்னவென்றால் என் மகன் கேசவன் என்பவனை தங்களிடம் படியாள் அடிமை சாதினமாக விட்டு அதன் பேரில் இதற்கு 1912-ம் வருஷம் ஆகஸ்ட் மாதம் 17-ந் தேதியில் தங்கள் பேருக்கு நான் எழுதிக் கொடுத்தபடியாள் பத்திரத்தில் கண்ட தொகை 12 8-0 நான் நாளது தேதியில் மேற்படி கேசவன் கல்யாணத்திற்காக ரொக்கத்தில பெற்றுக் கொண்டது ரூபாய் 53-8 0 ஆக ரூபாய் 66 0-0 இந்த ரூபாய் அறுபத்தி ஆறும் நான் தங்களுக்கு ரொக்கமாய் கொடுக்க வேண்டியதான படியாலே மேற்படி பணத்திக்கு வட்டிக்கு பதிலாக மேற்படி கேசவன் படியாள் வேலை செய்து வருகிறது. மேற்படியானுக்கு பட்டணம் படி $1\frac{1}{4}$ பிடித்த மரக்கால் மாதம் 1க்கு 6 மரக்கால் விதம் வருஷம் 1க்கு மதிப்பு ரூ. 12-0-0. தினம் 1க்கு இரண்டு வேளை சாப்பாட்டுக்கு வருஷம் 1க்கு மதிப்பு ரூபாய 12-0-0 வருஷம் 1க்கு சோமன் 1க்கு ரூபாய் 1-0-0 ஆக மதிப்பு ரூபாய் 26-0 0 இந்த ரூபாய் இருபத்தி ஆறு மதிப்புள்ள வரும்படியை நான் பெற்றுக் கொண்டு நான் வேலையில் யாதொரு குந்தகமில்லாமல் வேலைசெய்து வருகிறது நான் வேலையில் யாதொரு குந்தகம் நேரிட்டால் நின்ற நாள் கிடு .............. அசல் தொகையுடன் சேர்த்து என்னை தொர்ந்து பெற்றுக் கொள்ள சம்மதிக்கிறேன்.

சொத்தின் விவரம் .........

(ஒம்) மத்தாளி

மேற்கண்ட வாறு அந்த பதிவு செய்யப்பட்ட பத்திரத்தில் கூறப்பட்டுள்ளது.

### முப்பாட்டன் தலைமுறையாக

மீட்கப்பட்ட இந்த பண்ணையடிமைகளாக இருந்தவர்களில் பலர், அரசுக்கு சொந்தமான புறம்போக்கு நிலத்தில் வேலை செய்து கொண்டு, அவர்கள் அந்த புறம்போக்கு நிலத்தை வளைத்துப்போட்டு அனுபவத்தில் கொண்டிருந்த மிராசுதார்களிடம் பண்ணையடிமைகளாக இரண்டு வேளை கூழுக்காக வேலை செய்து வந்துள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது அவர்களுடைய வாழ்க்கை முறை பற்றி மீட்கப்பட்ட அரிஜன ஏழை விவசாய தொழிலாளி நடேசன் கூறியதாவது:—

நாங்கள் முப்பாட்டனுக்கு முந்தைய தலைமுறையிலிருந்து பண்ணையடிமைகளாகஇருந்து வருகிறோம். உதாரணமாக நான் 1945-ம் ஆண்டு எங்கள் ஊரைச் சேர்ந்த பண்ணை உடையார் என்பவரிடம பெற்றுக்கொண்ட 60 ரூபாய் கடனுக்காக பத்திரம் எழுதிக் கொடுக்க நேர்ந்தது. அந்த பத்திரம் ரிஜிஸ்ட்ரார் ஆபீஸில் பதிவு செய்யப்பட்டது. அதில்கண்டுள்ளபடி 2 வேளை கூழும், வருடத்துக்கு 1 வேட்டி துண்டும் வாங்கிக் கொண்டு வேலை செய்து வந்திருக்கிறோம்

அந்த ஒப்பந்தத்தை மீறி நடந்தால் மரத்தில் கட்டி வைத்து உதைப்பதோடு ஊரை விட்டு விரட்டிவிடுவார்கள் அதனால் எங்களுக்கு வேறு வழியில்லாமல் நாங்கள அடிமை வேலை செய்ய நேர்ந்தது.

இவ்வாறு நடேசன் கூறினார்.

### கொத்தடிமை மறுவாழ்வு

கொத்தடிமை முறையிருப்பதைக் கண்டுபிடித்து அவர்களை மீட்டிய திருக்கோவிலூர் கோட்டாட்சித் தலைவர் எம். முருகன் இது பற்றி கூறியதாவது:

பிரதமர் அறிவித்துள்ள 20 அம்ச திட்டத்தை செயல்படுத்தும் நோக்கத்துடன், மாவட்ட ஆட்சித் தலைவர் விழுப்புரம் உளுந்தூர்பேட்டை, திருக்கோவலூர் வட்டாரங்களில் கொத்தடிமை முறை இருக்கிறதா என்பது பற்றி விசாரணை நடத்துமாறு கேட்டுக் கொண்டதைத் தொடர்ந்து வியாழக்கிழமை (8-ந் தேதி) காலை 6 மணிக்கு பூ. கொனலவாடி அரிஜன காலனிக்கு சென்று ஒரு வயோதிகரிடம் விசாரித்தோம். அவர் அந்த மதிரி இருப்பதாகவும் அதற்கான ஒரு "பிராமிசரி நோட்" ஒன்றையும் காட்டி 15படி நெல்லுக்காக அடிமைகளாக வேலை செய்து வருவதாகக் கூறினர்.

அதை தொடர்ந்து அவ்வாறு வேலை செய்துவருவதாக கூறினர்.

அதைத் தொடர்ந்து அவ்வாறு வேலை செய்து வருவதாக கூறியவர்களிடமும், கிராமத்தில் உள்ள மற்றவர்களிடம் கடும் விசாரணை நடத்தினோம்.

கடுமையான விசாரணையில் 14 பேர் கொத்தடிமைகளாக இருப்பது கண்டுபிடிக்கப்பட்டது உதாரணமாக 1945-ம் ஆண்டில் பதிவு செய்யப்பட்ட பத்திரம் கூட கண்டுபிடிக்கப்பட்டது. அந்த தொழிலாளி வேறு இடத்துக்கு வேலைக்கு போனால் அவனை தடுத்து நிறுத்தவோ, கட்டிவைத்து அடிக்கவோ ஊரைவிட்டு விரட்டவோ, உரிமை இருப்பதாக அதில் கண்டுள்ளது.

### பண்ணையார் மிரட்டல்

பின்னர் 1971-ஆம் ஆண்டிலிருந்து 1975-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் கூட பலபத்திரங்களுக்குப்பதிலாக வாங்காதகடனுக்காகபிராமிசரி நோட்டு எழுதி வாங்கிக் கொண்டு அவனை பண்ணையடிமையாக வேலையில் வைத்திருக்கிறார்கள்.

அதிலும் புறம்போக்கு நிலத்தை ஆக்கிரமித்துக் கொண்டிருக்கும் மிராசுதார்கள் இவ்வாறு பண்ணையடிமைகளாக வைத்திருக்கிறார்கள். பிராமிசரி நோட்டுகளுக்கு பணம் கொடுக்கவேண்டும் என்றும் இல்லையென்றால் கோர்ட்டுக்கு போகவேண்டி வரும் என்றும் அவர்களை மிரட்டி வேலைக்கு வைத்திருக்கிறார்கள்.

இவ்வாறு இருந்திருப்பது குறித்து கொத்தடிமைகளாக இருந்தவர்களிடமும், அவர்களை வேலைக்கு வைத்திருந்தவர்களிடமும் வாக்குமூலம் வாங்கியிருக்கிறோம்.

இதை வைத்து நடவடிக்கை எடுக்கப்போகிறோம்.

இப்போது மீட்கப்பட்டுள்ள இவர்கள் 14 பேருக்கும் மறுவாழ்வளிக்க அரசாங்க புறம்போக்கு நிலத்திலிருந்து தலா 2 ஏக்கர் நிலம் கொடுக்க உத்தேசித்துள்ளோம். அதற்கு உதவியாக "இந்திய ஓவர்சீஸ் பாங்க்" ஒவ்வொருவருக்கும் தலா ரூ. 2 ஆயிரம் கொடுக்க முடிவு செய்துள்ளது.

இது இன்னும் ஒரு வாரத்தில் கொடுக்கப்பட்டுவிடும்.

இவ்வாறு முருகன் கூறினர்.

மேலும் அவரிடம் சமூகக்கண்ணோட்டத்தில் இதுபற்றிய உங்கள் கருத்து என்ன என்று கேட்டதற்கு அவர் கூறியதாவது:—

நான்கூட பிரதமர் அறிவித்தவுடன் இது போன்ற கண்மூடித்தனமான முறைகள், உத்திர பிரதேசம், பீகார் போன்ற இடங்களில் தான் இருப்பதாக நினைத்தேன். ஆனால் எங்களுக்கு தெரியாமல் எங்கள் நிர்வாகத்தில் உள்ள பகுதியில் இருந்து வந்திருப்பது வெட்கப்பட வேண்டியது. அவர்கள் சற்காலமனிதர்களைப்போல நடத்தப்பட்டு வந்திருக்கும் இந்தக் கொடுமைகளை பார்க்கும் போது சுதந்திர இந்தியாவில் 1976-ம் ஆண்டில் தான் நாம் இருக்கிறோமா என்று சந்தேகிக்க வேண்டியிருக்கிறது.

இப்போது கண்டுபிடிக்கப்பட்ட பின்னர் தென்னாற்காடு மாவட்டத்தில், பரவலாக இந்த கொத்தடிமை முறை இருப்பதாகவும், பல பெரிய மனிதர்கள் உழைக்கும் மக்

(7-ம் பக்கம் பார்க்க)



கோகலே பள்ளி ஆண்டு விழாவில் தொடர்ந்து மூன்று முறை விளையாட்டுப் போட்டிகளில் பரிசு பெற்ற ஏ. வசந்திக்கு நடிகை ராஜசுலோசனா பரிசு வழங்கினர்.

# தற்கொலைகளுக்கு காரணம் என்ன?: ஒரு படப்பிடிப்பு

**புதுடெல்லி, ஏப். 14—இந்தியாவில் தற்கொலைகள் அதிகரித்து வருவதற்கான காரணங்கள் இந்திய குற்றவியல் விரல் பதிவு நிறுவனத்தின் அறிக்கையொன்றில் வெளியிடப்பட்டிருக்கிறது**

இது சம்பந்தமாக குற்றவியல் நிறுவனத்தை சார்ந்த சுக்லா ஆய்வு அறிக்கையொன்றை வெளியிட்டு இருக்கிறார்.

அந்த அறிக்கையில் கூறப்பட்டிருப்பதாவது:—

இந்தியாவில் பெண்களைவிட ஆண்கள் தற்கொலை செய்து கொள்ளும் எண்ணிக்கை அதிகரித்து வருகிறது.

18 வயதிலிருந்து 30 வயதிற்குள்ளாக இருக்கும் இளைஞர்கள் வாழ்வின் மீது வெறுப்புற்று தற்கொலை செய்து கொள்கிறார்கள். இந்த வயதில் இளைஞர்கள் வாழ்க்கையோடு போராடுகின்றார்கள்.

இளமையில் பிரச்னைகளை உணர்ச்சிப்பூர்வமாக அணுகுகின்றார்கள். அறிவுப் பூர்வமாக வாழ்க்கை போராட்டத்தை அவர்கள் நடத்துவதில்லை.

ஏதோ ஒரு வேகத்தில் அவசரமாக எடுக்கும் முடிவுகள் தற்கொலையில்முடிகிறது.

தர்க்க ரீதியாக ஒரு முடிவுக்கு வர முடியாத பருவம் இளமை.

### மேலை நாடுகள்

மேற்கத்திய நாடுகளைப்போலவே இந்தியாவிலும் தற்கொலைகள் அதிகரித்து வருகின்றன.

உலகம் முழுவதும் 1000 பேர்கள் தற்கொலை செய்து கொண்டார்களானால் அதில் 100 பேர்கள் இந்தியாவைச் சேர்ந்தவர்களாக இருக்கின்றார்கள்.

கடலோரப் பகுதிகளில் தற்கொலைகள் அதிகமாக இருக்கின்றன.

தற்கொலையில் தமிழ்நாடு முதலிடம் வகிக்கிறது. அடுத்தபடியாக ஆந்திரபிரதேசத்தில் தற்கொலைகள் அதிகமாக இருக்கின்றன.

இதையடுத்து கர்நாடகா, மேற்கு வங்காளம், பீகார், பஞ்சாப், அஸ்ஸாம் ஆகிய மாநிலங்கள் வருகின்றன.

ஜம்மு காஷ்மீர் மாநிலத்தில் தற்கொலைகள் மிகக் குறைவாக இருக்கின்றன.

1972-ம் ஆண்டு கணக்கின்படி பெங்களூர் நகரில் தற்கொலைகள் அதிகமாக இருந்தன.

இந்த நகரத்துக்கு அடுத்த இடம் சென்னை நகரமாகும்.

### காரணம் என்ன?

இவ்வாறு தற்கொலைகள் அதிகரிப்பதற்கு காரணம் என்ன என்பது பற்றி பாட்னா பல்கலைக்கழக நிபுணரான தாக்கூர் கூறுவதாவது:—

ஏழ்மை, வேலையில்லாத் திண்டாட்டம் காரணமாகவே பெரும்பாலானோர் இந்தியாவில் தற்கொலை செய்துகொள்கின்றனர்.

ஜாதிவெறியால் ஏற்பட்ட விரக்தி காரணமாகவும் சிலர் தற்கொலை செய்துகொள்கின்றனர்.

வேண்டியவர்களுக்கு வேலை, சலுகை முதலியவை கொடுக்கப்படுவதினால் திறமையானவர்கள் புறக்கணிக்கப்படுகிறார்கள் என்றார் தாக்கூர்.

### தற்கொலை குற்றமா?

தற்கொலை செய்துகொள்ள முயற்சி செய்வது இந்திய குற்றவியல் சட்டப்படி குற்றமாகும். ஆனால் தற்கொலை முயற்சியை குற்றமாக கருதக் கூடாது என்று சட்டகமிஷன் அரசுக்கு பரிந்துரை செய்திருக்கிறது.

மதுரை மருத்துவமனை மனோதத்துவ நிபுணரான வி. ராவ் இது சம்பந்தமாக விரிவான ஆராய்ச்சியொன்றை நடத்துவார் என்று தெரிகிறது.

# தி. மு. க. தர்மகர்த்தாக்களுக்கு கல்தா

சென்னை, ஏப். 14— தமிழ்நாட்டிலுள்ள ஆலயங்களின் அறங்காவலர் குழுக்களை மாற்றியமைப்பதென அரசு முடிவு செய்துள்ளதாக கவர்னர் கே. கே. ஷா கூறினர்.

இதற்கான சட்டங்களை தயாரிக்கும் முயற்சியில் அரசு ஈடுபட்டுள்ளதாகவும் அவர் தெரிவித்தார்.

தெய்வபக்தியில்லாத திமுகவினர் அறங்காவலர்களாக தமிழகத்திலுள்ள கோவில்களில் இருப்பதால் ஏற்பட்டுள்ள பிரச்னைகள், வேறு ஊழல்கள் குறித்து வந்துள்ள பல புகார்களின் எதிரொலிதான் இந்த நடவடிக்கை என்று கூறப்படுகிறது.

இதன் காரணமாக 'கோவில் பெருச்சாளிகளாக' உள்ள திமுக வினருக்கு கல்தா கொடுக்கப்படும் என்று தெரிகிறது.

# டாக்டர் அம்பேத்கார் 86-வது பிறந்த நாள்: சத்தியவாணி அழைப்பு

**சென்னை, ஏப். 14—தாழ்த்தப்பட்டோரின் குறைகளை நீக்க பிரதமர் இந்திரா எடுக்கும் முயற்சிகளுக்கு பூரண ஆதரவு அளிப்பதாக அம்பேத்கார் பிறந்த நாளில் தாழ்த்தப்பட்ட மக்கள் சபதம் எடுத்துக் கொள்ளவேண்டும் என்று சத்தியவாணி முத்து கூறினர்.**



தாழ்த்தப்பட்டோர் முன்னேற்றக் கழக பொதுச் செயலாளரும் முன்னாள் தமிழக அமைச்சருமான டாக்டர் சத்தியவாணி முத்து தமது புத்தாண்டு செய்தியில் கூறியுள்ளதாவது:—

"ஏமாற்றமும், அதிருப்தியும் நிறைந்த ஆண்டு மறைந்து இன்று வளமான வாழ்வில் மன அமைதி தரும் புத்தாண்டு பிறந்துள்ளது.

மக்களாட்சி உருவில் மனிதருக்குள்ள தீய எண்ணங்கள் தலைவிரித்து ஆடியதால் ஏற்பட்டுள்ள விபரீத விளைவுகள் கடந்த ஆண்டோடு முடிவுற்றன.

பிரதமரின் 20 அம்ச திட்டத்தை நிறைவேற்ற ஒத்துழைப்பு தந்து மனிதனுக்கு மனிதன் அடிமைப்படுத்தும் கொத்தடிமை முறை நீங்கி விவசாய தொழிலாளர்கள் மற்றும் அனைவரும் முழு வாழ்வு பெற பாடுபட உறுதி கொள்வோம்.

நாளை டாக்டர் அம்பேத்காரின் 86 வது பிறந்தநாளில் தாழ்த்தப்பட்ட மக்கள் ஒன்று சேர்ந்து சமுதாயத்தை பீடித்துள்ள இழி நிலைகள் நீங்க பாடுபட முன்வரவேண்டும்.

தாழ்த்தப்பட்ட மக்களின் நிலை இன்னமும் முன்னேற வில்லை. தீண்டாமை இன்னமும் ஒழிக்கப்படவில்லை.

இதனை முற்றிலும் உணர்ந்த பிரதமர் இந்திரா காந்தி எடுக்கும் முயற்சிகள் அனைத்திலும் தாழ்த்தப்பட்ட முன்னேற்றக் கழகம் உறுதியுடன் நிற்கும்.

இந்த உறுதியினை எடுக்கும் வரையில் நாளை டாக்டர் அம்பேத்கார் சிலைக்கு மாலை அணிவித்து அவரை நினைவு கூர்ந்து தீவிரமாக பணியாற்ற சபதமேற்போம் என்றார் சத்தியவாணி முத்து.

# சினிமா தியேட்டரில் திடீர் தீ

சென்னை, ஏப். 14—சென்னை சினிமா தியேட்டர் ஒன்றில் திடீரென்று தீவிபத்து ஏற்பட்டது. தீயணைக்கும் படையினர் விரைந்து சென்று தீ பரவா வண்ணம் உடனடியாக அணைத்தனர்.

சென்னை ஆயிரம் விளக்குப் பகுதி அண்ணாசாலையில் உள்ள சபையர் சினிமா தியேட்டரில் திடீரென்று தீவிபத்து ஏற்பட்டது.

தீயணைக்கும் படையினர் விரைந்து சென்று தீ மேற் கொண்டு பரவா வண்ணம் உடனடியாக அணைத்தனர். இந்த விபத்தில் சுமார் 300 ரூபாய் பெறுமான முள்ள பொருள்கள் நஷ்டமடைந்தன.

தியேட்டர் அடித்தளத்தில் இருந்த குழாய் ஒன்றிலிருந்து பிராணவாயு கசிவு ஏற்பட்டதே இந்த தீவிபத்துக்குக் காரணம் என்று கூறப்படுகிறது.

அந்நிய செலாவணி மோசடி

# இதுவரை 2000 பேர் கைது

கல்கத்தா, ஏப் 14— அந்நிய செலாவணி மோசடி மற்றும் கடத்தல் தடுப்புச் சட்டத்தை மீறியதாக இது வரை நாட்டில் 2 ஆயிரம் பேர்கள் கைது செய்யப்பட்டுள்ளதாக மத்திய அமைச்சர் பிரணப்முகர்ஜி கூறினர்.

## சென்னையில் நாளைய நிகழ்ச்சிகள்

பட்டினப்பாக்கம் முத்தமிழ்க் கலையரங்கு; முத்தமிழ் விழா: தலைமை: மு. வே. ராமகிருஷ்ணன். வாழ்த்துரை: எம். பக்தவத்சலம். சிறப்புரை: எஸ். ரத்தினவேல் பாண்டியன், மாலை 6-30 மணி "உறவு என்ன சொல்லடி" நாடகம் இரவு 8 மணி.

திருவேற்காடு கருமாரியம்மன் ஆலயம்-லட்சார்ச்சனை விழா: அம்மன் கோலடிக்கு எழுந்தருளல் காலை 7 மணி. அபிஷேக அலங்காரம் தூபதீப நைவேத்தியம் மதியம் 11 மணி. திருவீதி உலா. மாலை 5-30 மணி.

# மின்வாரிய ஊழியர்களை நிரந்தரம் செய்வதில் பாகுபாடா?

**சென்னை, ஏப். 14—தமிழக மின்சார வாரியத்தில் தகுதி பெற்ற எழுத்தர்கள், கூலித்தொழிலாளர்கள் நிரந்தரம் செய்யப்படாமல் இருக்கின்றனர் தி.மு. கழகப் பிரமுகர்களுக்கு "கப்பம்" கட்டியவர்கள் நிரந்தரமாக்கப்பட்டிருக்கின்றனர்.**

தமிழக மின்சார வாரியத்தில் உள்ள இந்த குறை பற்றிய விவரமாவது:—

தமிழக மின்சார வாரியத்தில் தற்காலிக ஊழியர்கள் ஏராளமான அளவில் இருக்கின்றனர். அவர்கள் எல்லா விதமான வேலைகளையும் செய்து வருகின்றனர். இவர்கள் நான்கு அல்லது ஐந்து ஆண்டுகாலம் பணியாற்றி வந்தும் அவர்கள் இதுவரை நிரந்தரம் செய்யப்படாமல் இருக்கிறார்களாம்.

இதேபோல குமாஸ்தாக்கள், டைப்பிஸ்டுகள் வேலைக்கு தேர்ந்தெடுக்கப்பட்டு பணிபுரிபவர்களிலும் சிலர் தி. மு. கழக சட்டமன்ற உறுப்பினர்கள் போன்றவர்களுக்கு 'கப்பம்' (லஞ்சம்) கொடுத்து நிரந்தரமாகிவிட்டதாக கூறப்படுகிறது. அதே தகுதி பெற்ற மற்ற ஊழியர்கள் இன்னும் தற்காலிக ஊழியர்களாகவே பணிபுரிந்து வருகிறார்களாம். தி. மு. கழக எம். எல். ஏக்களை கவனிக்காதவர்கள் அல்லது அவர்களுக்கு வேண்டாதவர்கள் என்ற காரணத்தினால் நிரந்தரம்செய்யப்படாமல்இருப்பதாக சொல்லப்படுகிறது.

5-ம் பக்கத் தொடர்ச்சி

களை கொத்தடிமைகளாக நடத்தி வருவதாகவும் அடுத்தடுத்து தகவல் வந்து கொண்டிருக்கிறது.

இது பற்றி தீவிர நடவடிக்கை எடுத்து வருகிறோம்.

இவ்வாறு முருகன் கூறினர்.

### ஜாகிர்தார்கள்

இவ்வாறு கொத்தடிமை முறை தென் ஆற்காடு மாவட்டம், கல்வராயன் மலைப் பகுதியில், பல ஆயிரக்கணக்கான உழைக்கும் மக்களை கொத்தடிமைகளாக நடத்திவரும் மிகப்பெரிய 3 ஜாகிர்தார்களைப் பற்றியும் அதிகாரிகள் தீவிர விசாரணை நடத்தி வருவதாகவும், அதிலிருந்து பல திடுக்கிடும் தகவல்கள் கிடைக்கும் என்றும் நமது நிருபர் தெரிவிக்கிறார்.

### புதுவையிலும்....

தென் ஆற்காடு மாவட்டத்தில் பெருமளவில் நிலம் வைத்துள்ள அதே நிலச்சுவான்தார்களுக்கு புதுவை மாநிலத்திலும் நிலம் இருக்கிறது. இதனால் இதே முறையில் கொத்தடிமை முறை புதுவையிலும் இருப்பதாக, கருதி, அதிகாரிகள்விசாரித்து வருகிறார்கள்.

# தஞ்சை நோக்கி அணி திரள்க: மூப்பனர் அழைப்பு

சென்னை, ஏப். 14—வருகிற வெள்ளிக்கிழமை (16ம் தேதி) தஞ்சையில் நடைபெறும் இருபது அம்ச விளக்க ஊழியர் கூட்டத்திற்கு தமிழகம் முழுமையுமிருந்து மக்கள் திரண்டு வரவேண்டும் என்று தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் கருப்பையா மூப்பனர் அழைப்பு அனுப்பியிருக்கிருர்.

இந்தக்கூட்டத்தில் பருவா, புரபிமுகர்ஜி, மரகதம் சந்திரசேகர், யஷ்பால்கபூர், தமிழக காங்கிரஸ் தலைவர்கள் ஆகியோர் கலந்து கொள்கின்றனர்.



கருப்பையா மூப்பனர் ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:—

பாரதப் பெருந் தலைவர் காமராஜரின் கனவுகளை நிறைவேற்றுகின்ற அறுபது கோடி மக்களின் தலைவி பாரத பிரதமர் இந்திரா காந்தியின் சீரிய தலைமையில் இணைந்த நாம் அகில இந்திய காங்கிரஸ் தலைவர் டி. கே. பருவா முன்னிலையில் தஞ்சை நகரில் தமிழக காங்கிரஸ் செயற்குழுவை இம்மாதம் 16-ந் தேதி கூட்ட இருக்கிருேம்.

எதிர்கால கட்சி வேலைத் திட்டம் விவசாய, தொழிலாளர், நடுத்தர மக்கள், மாணவர், பிரச்சினைகளை விவாதித்து தமிழகத்தில் விஷமிகளால் பரப்பப்பட்டுள்ள பிரிவினை உணர்வினை முறியடித்து தேசிய பெரு வெள்ளத்தில் இளைஞர் சமுதாயம் இணைந்து செயல்பட திட்டங்களை உருவாக்க தீவிரமாக செயல்பட்டு வருகிருேம் என்பதை நாடு நன்கு அறியும்.

ஏப்ரல் 15ம் தேதி காலை சென்னையிலிருந்து சோழன் எக்ஸ்பிரசில் புறப்பட்டு வரும் அகில இந்திய காங்கிரஸ் தலைவர் டி. கே. பருவா, செயலாளர்கள் புரபி முகர்ஜி, மரகதம் சந்திரசேகர் யஷ்பால் கபூர் சிவாஜி கணேசன், தமிழக காங்கிரஸ் நிர்வாகிகள் அனைவரும் வருகிருர்கள்.

## அணி திரள்க

எல்லா ரெயில்வே நிலையங்களிலேயும், பொதுமக்களுக்கோ, ரெயில்வே அதிகாரிகளுக்கோ தொல்லை இல்லாத வகையில் நமது தோழர்கள் பல்லாயிரக்கணக்கில் கூடி சிறப்பான வரவேற்பு அளிக்க வேண்டுகிறேன். மாலை தஞ்சை ரெயில்வே நிலையத்தில தலைவர்களை வரவேற்கவும், 16-ந் தேதி மாலை அரண்மனை திடலில் நடைபெறவுள்ள இருபது அம்ச விளக்க ஊழியர் கூட்டத்திற்கும் தமிழகத்தின் பல்வேறுபட்ட பகுதிகளிலிருந்தும் அணி திரண்டு வருமாறு அழைக்கிறேன்.

## துளசி அய்யா

தஞ்சை அரண்மனைத் திடலில் நடைபெறும் சரித்திரம் படைக்கும் கூட்டத்திற்கும், தஞ்சைக்கு வரும் பருவாவை ரெயில் நிலையத்தில் வரவேற்கவும் திரண்டு வரும்படி துளசி அய்யா வாண்டையார் கேட்டுக் கொண்டிருக்கிருர்.

## சிவாஜி ரசிகர் வரவேற்பு

சோழன் எக்ஸ்பிரஸ் ரெயிலில் தஞ்சைக்கு வரும் காங்கிரஸ் தலைவர்களுக்கு சிவாஜி ரசிகர்கள் ரெயில் நிலையங்களில் சிறப்பான முறையில் வரவேற்பளிக்க ஏற்பாடு செய்துள்ளனர்.









## வள்ளுவர் கோட்டம்

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

செய்து இந்தச் சிலை புதிய வடிவில் அமைக்கப்பட்டுள்ளது

சகல சாமுத்ரிகா லட்சணங்களும் இந்தச் சிலையில் வடிக்கப்பட்டுள்ளது.

இந்தத் தேரின் பிரதி பிம்பத்தை மேல் மாடத்தில் காண இரண்டு பெரும் நீர்த் தொட்டிகள் அமைக்கப்பட்டுள்ளன. அந்த இரு நீர்த் தேக்கங்களிலும் தேரின் எழில் மிகு உருவைக் காண முடியும்.

திருக்குறள் ஆராய்ச்சி நிலையமும் இங்கே இடம் பெற்று உள்ளது.

1973 நவம்பரில் துவக்கப்பட்ட இந்த வேலை இந்த ஆண்டு மார்ச் இறுதியில் 45 சதவிகிதம் தான் முடிந்து இருந்தது. ஆறு வாரத்தில் நமது எஞ்சினீயர்களும், தொழிலாளர்களும் அதிகாரிகளும் இரவு பகலாக உழைத்து வேலையை முடித்துள்ளனர்.

உள்துறை செயலாளர் சுப்பிரமணியம் உள்ளாட்சித் துறை செயலாளர் டி. வி. வெங்கடராமன், செய்தி விளம்பரத் துறை டைரக்டர் கிருஷ்ணமூர்த்தி துணை டைரக்டர் கிருஷ்ண பாரதி, தலைமைப் பொறியாளர் பத்மநாபன், வள்ளுவர் கோட்ட சிறப்பு அதிகாரி வெங்கடாசலபதி ஆகியோர் நிருபர்களுக்கு வள்ளுவர் கோட்ட சிறப்புக்களை விளக்கினர்கள்.

## விவாக ரத்து: சுலபமாக்க புது சட்டம்

புதுடெல்லி, ஏப். 14—விவாக ரத்தை சுலபமாக ஆக்குவதற்காக புது சட்டம் கொண்டுவரப்படும். பார்லிமெண்டின் தற்போதைய கூட்டத்தில் இதற்கான மசோதா வரும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.


Printed by S. V. G. Sowrirajulu at the M.C.P.P.S. Press, No. 4. South Bank Road, Madras-28, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.

Editor: K. SOMASUNDAR. (SOLAI)


# பல்லவன் போக்குவரத்துக் கழகம் (அரசு போக்குவரத்து) மேற்கொள்ளும் திட்டம்

## பிரகடனம் ரத்து (Cancellation of Notification)

**எண். VI 3 (b) 50/76**

காஞ்சிபுரம்-மதுராந்தகம், செல்லும் வழித் தடத்தை ஏற்றுக்கொள்ளும் திட்டம் குறித்து, 1974 ஏப்ரல் 3ந் தேதி தமிழ்நாடு அரசு கெஜட்டின் பிரத்தியேக பிரதி எண். 115ல் பாகம் VI பகுதி 3 (b)ல் பிரசுரிக்கப்பட்டுள்ள அறிவிப்பு இதன் மூலம் திரும்பப் பெறப்படுகின்றது.

## மோட்டார் வாகனங்களைப்பற்றிய அரசு போக்குவரத்து நிறுவனம் (பல்லவன் போக்குவரத்துக் கழகம்) மேற்கொள்ளும் திட்டம்

### படிவம்

(1940-ம் ஆண்டு தமிழ்நாடு மோட்டார் வாகனங்கள் சட்டம் விதி 29 4 C (1) ஐப் பார்க்கவும்)
G. O. MS No 156 உள்துறை தேதி 28—1—1976-ல் மாற்றியமைக்கப்பட்டபடி)

**எண். VI (3b) 51/76**

பொதுமக்களின் நலத்தைக் கருதி கீழ் ஷெட்யூல் 1-ல் குறிப்பிட்டுள்ள வழித்தடத்தில் போக்குவரத்தை திறமையானதாகவும், போதுமானதாகவும், சிக்கனமாகவும், ஒருங்கிணைந்த சாலை போக்குவரத்தாக இந்த அரசு போக்குவரத்து நிறுவனம் மூலம் நடத்த அரசு போக்குவரத்து நிறுவனமாகிய பல்லவன் போக்குவரத்து கழகம் கருதுகிறது.

இதற்காக அரசு போக்குவரத்து நிறுவனமாகிய பல்லவன் போக்குவரத்துக் கழகம் கீழ்க்கண்ட திட்டத்தை வகுத்துள்ளது. மோட்டார் வாகனங்கள் சட்டம் 1939 ன் (1939-ம் வருடத்திய மத்திய சட்டம் VI) பிரிவு 68-C-ல் கண்டபடி பொது மக்களின் தகவலுக்காக கீழ பிரசுரிக்கப்படுகிறது.

### ஷெட்யூல்-I

எந்த பகுதி அல்லது வழித்தடத்திற்கு இந்த திட்டம் மொழியப்பட்டுள்ளது? — வழித்தடம்: சென்னை to பிளேஸ் பாலையம் மற்றும் இவ்வழித் தடத்தில் கவிந்திருக்கும் எந்த பகுதியிலும் ஷட்டில் சர்வீஸ்கள்.

### ஷெட்யூல்—II

(1) வழித்தடம் (ஆரம்ப இடம், முடியும் இடம், வழியில் உள்ள முக்கியமான இடங்கள், வழித்தடத்தின் தூரம்) அல்லது அதன் பகுதி தூரம். — காஞ்சிபுரம் to மதுராந்தகம் (வழி) தூசி, பெருநகர் உத்திரமேரூர். & கருங்குழி (62.76 கிலோ மீட்டர்கள்)

(2) பகுதி (நகராட்சி, தாலுகா, மாவட்ட எல்லை எந்த வழித்தடத்திற்கு திட்டம் தீட்டப்பட்டுள்ளதோ அதை யொட்டி) — பொருந்தாது

(3) அரசு போக்குவரத்து நிறுவனத்தால் நடத்தப்படவிருக்கும் பேருந்துகள் எந்த வகையைச் சார்ந்தது? (பெருநகர், டவுன், மற்ற சர்விஸ்கள், சாதாரணம், எக்ஸ்பிரஸ்) — புறநகர்

சாதாரணம்

(4) மற்ற பஸ்களை முழுமையாக அல்லது பகுதியாக ஒதுக்கிவிட்டு, ஒவ்வொரு வழித்தடத்திலும் அரசு போக்குவரத்துக்களின் அதிகபட்ச, குறைந்தபட்ச எண்ணிக்கை. — இந்த வழித்தடம் முழுமையிலும் கீழே அன்னெக்ஸரில் விவரிக்கப்பட்டுள்ளபடி பேருந்து நடத்துபவர்கள் அனைவரையும் ஒதுக்கிவிட்டு

(a) அதிகபட்ச எண்ணிக்கை. — 8 (எட்டு)

(b) குறைந்தபட்ச எண்ணிக்கை. — 1 (ஒன்று)

(c) வகை. — செமிசலூன்-சிங்கிள்டெக்

(d) உட்கார இடவசதி. — 30 முதல் 70

(5) மற்றவர்கள் முழுமையாகவோ அல்லது பகுதியாகவோ ஒதுக்கிவிட்டு அரசு போக்குவரத்து நிறுவனம் நடத்த திட்டமிட்டிருக்கும் அதிகபட்ச, குறைந்தபட்ச டிரிப்புகளின் எண்ணிக்கை. — இந்த வழித்தடத்தில் கவிந்திருக்கும் பகுதியில் பேருந்து நடத்துபவர்களை முழுமையாக ஒதுக்கிவிட்டு, அதிகபட்சம், 82 அல்லது போக்குவரத்திற்கு தேவைப்பட்டபடி, ஷட்டில் டிரிப்புகளுடன் சேர்ந்து

குறைந்தபட்சம்: 4

(6) அரசு போக்குவரத்தால், சீராக நடத்துவதற்காகவும் சிறப்பு சந்தர்ப்பங்களில் விடுவதற்காகவும் ரிசர்வில் வைக்கப்படவிருக்கும் பஸகளின் எண்ணிக்கை. — அரசு போக்குவரத்து நிறுவனம் நடத்தும் பேருந்துகளில் 5-ல் ஒரு பகுதி.

(7) அரசு போக்கு வரத்தால் நடத்தப்பட இருக்கும் பஸ்களை நிறுத்துவதற்கும், பராமரிப்பதற்கும், ரிப்பேர் செய்வதற்கும எந்தவிதமான ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. — தினசரி பராமரிப்பு காஞ்சீபுரத்தில் செய்யப்படும். மற்றும் பெரிய ரிப்பேர்கள் பல்லவன் போக்குவரத்து கழகத்தின் மத்திய பணிமனையிலும் வெளியிடங்களிலுள்ள பணிமனையிலும் மற்றும் மண்டல பணிமனையிலும் செய்யப்படும்.

(8) பிரயாணிகள் வசதியாகவும் சௌகரியமாகவும் பயணம் செய்யும பொருட்டு அரசு போக்குவரத்து நிறுவனம் செய்ய இருக்கும் ஏற்பாடுகள். — சிறந்த அளவு உட்கார வசதி செய்து கொடுக்கும் பொருட்டு குஷன் இருக்கைகள் மற்றும் புத்தம் புதிய பஸ்கள், ஒவ்வொரு இருக்கைக்கும் போதுமான இடைவெளி.

(9) பஸ் நிறுத்துமிடங்கள், ஸ்டாண்டுகள் மற்றும் பஸ்களின் கால அட்டவணைகள் ஆகியவைப் பற்றிய அரசு போக்குவரத்து நிறுவனம் செய்ய இருக்கும் ஏற்பாடுகள். — எல்லா முக்கிய இடங்களிலும் காத்திருக்கும் ஷெட்டுகள் மற்றும் நிழற்கொடைகள் அமைக்கப்படும். அங்கங்கு கால அட்டவணையும் பார்வைக்காக வைக்கப்படும்.

(10) பயணிகளைத் தவிர, மற்ற பொருள்களை ஏற்றிச்செல்ல ஏதாவது ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளதா? — அரசாங்கத்தால் அவ்வப்போது நிர்ணயித்தபடி குறைந்த அளவு சொந்த சாமான்களைத் தவிர, செய்திப் பத்திரிகைகள் மற்றும் தபால் பைகள் ஆகியவைகளும் பயணிகளைத் தவிர, ஏற்றிச் செல்லப்படும்.

(11) அரசு போக்குவரத்து நிறுவனம் தெரிவிக்க விரும்பும் தகவல்கள் ஏதேனும் உள்ளனவா? — இந்த வழித்தடத்தில் கவிந்திருக்கும் பகுதிகளில் 25 கி.மீ. தூரத்திற்கும் அதிகமாக பேருந்து நடத்துவதற்கு அனுமதிக்கப்பட்ட தனி. நபர்கள், அவர்கள் வாரிசுகள், அவர்களால் நியமிக்கப்படுபவர்கள், அவர்களால் மாற்றப்பட்டவர்கள் அல்லது மற்றவர்களுக்கு இந்த திட்டம் பிரசுரிக்கப்பட்ட பிறகு எந்த ஒரு கோர்ட்டாலோ, அதற்கு கீழுள்ள அதிகாரம் படைத்தவரின் உத்தரவை ரத்து செய்துவிட்டு பிறகு பர்மிட் வழங்கப்பட்ட தனி நபர்களை முற்றிலும் நீக்கிவிடுவதற்காக ஏற்படுத்தப்பட்டது. இந்த திட்டம் மற்ற அரசு போக்குவரத்து நிறுவனங்கள் நடத்தும் திட்டத்திற்கு இதிலிருந்து விதிவிலக்கு உண்டு.

### அன்னெக்ஸ்

காஞ்சீபுரம் to மதுராந்தகத்திற்கிடையே, (வழி) தூசி, பெருநகர், உத்திரமேரூர் மற்றும் கருங்குழி வழியாக பேருந்து நடத்தும் தனியார்கள் பற்றிய விவரம்.

| பேருந்து நடத்தும் தனியாரின் பெயர் மற்றும் வரிசை எண் | பேருந்து நடத்தப் படும் வழித்தடம் (தூரத்துடன்) | கவிந்திருக்கும் வழித்தடம் (தூரத்துடன்) | ஓடும் பஸ்கள் எண்ணிக்கை | நடத்தப்படும் டிரிப்புகளின் எண்ணிக்கை | நிரந்தர பெர்மிட் அல்லது தற்காலிக பெர்மிட் | பெர்மிட் முடிவு தேதி | விவரங்கள் |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
| 1. எஸ். வி. நடேச முதலியார் உரிமையாளர், எஸ். எல். என். எஸ். டிரான்ஸ் போர்ட்ஸ், காஞ்சிபுரம். | காஞ்சீபுரம் to மதுராந்தகம் (வழி) தூசி, பெருநகர், உத்திரமேரூர் & கருங்குழி (62-76 கிலோமீட்டர்கள்) | வழித்தடம் பூராவிலும் (62-76 கிலோ மீட்டர்கள்) | 1 | 4 | தற்காலிக பெர்மிட் | 1976 ஏப்ரல் 30-ம் தேதி | — |

(போர்டாரின் உத்தரவுப்படி)

**ஒப்பம்: C. K. கோபாலகிருஷ்ணன்,**

பதவியின் பெயர்: நிர்வாக இயக்குநர் புறநகர் பல்லவன் போக்குவரத்துக் கழகத்திற்காகவும் அதன் சார்பிலும்,
அரசு போக்குவரத்து நிறுவனம்/பல்லவன் போக்குவரத்து கழகம்

DIPR/166 5/76